# இராணி மங்கம்மாள்

(வீரச்சுவை நாடகம்)

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்



அன்பு நிலயம்

இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா

## பதிப்புரை

இராணி மங்கம்மாள் பாண்டிநாட்டை ஆண்ட அரசி; வீரப்பெண்மணி; அவள் எதிரிகளை வென்று பெண்மையின் பெருமை விளங்க அரசாண்டதை, இந்நாடகம் உணர்ச்சி ததும்ப விளக்குகிறது. இது, மேடையில் நடிக்கத்தக்க வீரச்சுவை நிரம்பியது. இப்படி இன்னும் பல நாடகங்களை யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கள் எழுதியுள்ளார்கள். உரிய காலத்தில் அவை வெளிவரும்.

அன்பு நிலயத்தார்.

இராமச்சந்திரபுரம்,<br>
1—12—1943

௧௯௪௩—௧௨—௧

# இராணி மங்கம்மாள்

---

## நாடகப் பாத்திரங்கள்

---

1. இராணி மங்கம்மாள்
2. தளவாய் — படைத்தலைவன்
3. தொண்டைமான்
4. வீரத்தேவன், வீரன், பரதேசி, ராகோஜி
5. கேரளவர்மன்
6. இராமாசாரி
7. மந்திரி திலகம் — முதன் மந்திரி
8. அழகிரி — உள்நாட்டு மந்திரி, சதிகாரன்
9. வேங்கடநாய்க்கன் — மந்திரி
10. இளவரசன் விஜயரங்கன்
11. பங்காரு — அழகிரியின் கையாள்

வீரர், சௌராஷ்ட்ரர், மாகதர் முதலியோர்

---

# இராணி மங்கம்மாள்

## முதற் காட்சி

[போர்க்களம். மங்கம்மாள் சேனையும், கேரள வர்மன் படையும் போர் புரிதல். தளவாய், தொண்டைமான், வீரத்தேவன் மூவரும் பாய்ந்து பாய்ந்து போர் புரிதல். இக்காட்சி முழுதும், அடியில் வரும் போர்ப்பாட்டு முழங்கும்.]

தளவாய் :

தெய்வ முண்டு, தரும முண்டு
தீர ருக்கு வெற்றியே !
பொய் யதர்மக் கும்பல் வீழப்
போர் புரிவோம் வீரர்காள் !

வீரத்தேவன் :

வந்து நின்று கைகலந்தெம்
வாள் விருந்தைப் பாருங்கள் !
செந்தமிழ் மறவரைச்
செயிப்பவர்கள் யாவரே ?

தொண்டைமான் :

படை திரண்டு வாருங்கள் ;
பறக்க நம் ஜயக்கொடி
இடி முரசம் கொட்டுங்கள்,
இகலவர் நடுங்கவே !

[பாட்டுக் கேற்றபடி இரண்டு சேனை களும் வாள் வீசி "ஹா, ஹா" என்று கூவிப் போர் செய்தல்.]

கேரளவர்மன் : ஆ! பத்மநாபா....எந்தா ளுெங்கள் விதிவசம்....! யுத்தத்திலே அபஜயம் வந்துன்னதே....நம்மடே ஸமஸ்தானம் எங் ஙனே உஜ்ஜீவிக்கப் போகுன்னது. ஓ பர மேஸ்வரா, பகவதி........

தளவாய் : பிடி, குத்து, வெட்டு! [முரசுக் கேற்றபடி போர் கொடுத்து] கேரளவர்மா, கொடு கப்பம் ; வீணுக இரத்தம் சிந்தாதே!

கேரளவர்மன் : தளவாய், இது தமிழ்நாடு ; சேரசோழ பாண்டியர் நாடு. தமிழ் வேந்தரில் நான் சேரன். என் அரசே இன்றும் நிலைத் திருக்கிறது. செங்குட்டுவன் மரபில் வந்த நான், எனது நாட்டிற் புகுந்த அன்னியருக் குக் கப்பம் கட்டுவதா?

தொண்டைமான் : வஞ்சி பால, விந்திய மலைக்குத் தெற்கே யிருப்பவர் அனைவரும் தமிழர், திராவிடர். அனைவர் தாய்மொழியும் தமிழ் ; செங்குட்டுவன் பேசியது தமிழ். தாங் கள் பேசுவது, தமிழும் வடமொழியும் கலந்த மலையாளம். மலையாளம் பேசினுலென்ன? தெலுங்கு, கன்னடம் பேசினுலென்ன நாமெல்லாரும் தென்னுட்டுத் திராவிடர்களே! இந்த ஒற்றுமையை நிலைநாட்டவே இன்று

இந்தப் 'பெரிய ராமபாணத்தை' (தொண்டைமானுக்குத் தஞ்சை மன்னன் பரிசளித்த வாளின் பெயர்) எடுத்துப் போர் செய்கிறேன்.

*கேரளவர்மன் :* உண்மை ; நாமெல்லாரும் திராவிடரே, இப்போதுள்ள தென்னிந்திய அரசுகளில் எனது கேரளமே, தமிழர் வீரத்தைக் காத்து வருகிறது. மதுரையிலும் தஞ்சையிலும் நடப்பது அன்னியர் ஆட்சி. தெலுங்கர் நம்மவரே. ஆனல், அவர்கள் நம்மை அடக்கியாள வந்தால், செங்குட்டுவன் சந்ததி சும்மா இருப்பதா? பழந்தமிழ் மன்னனை எனக்கு மதிப்புக் கொடாமல் அடிமைபோல நடத்த முயன்ருல், கப்பம் கிடையாது.

*தளவாய் :* கேரளவர்ம, இராணி மங்கம்மாள் குற்றம் செய்தவரைக்கூட அடிமைபோல நடத்துவதில்லை. அரசி குணவதி. தங்கள் பழம் பெருமையும் வீரமும் அவளுக்கு நன்ருகத் தெரியும். கப்பம் வாங்குவதன் காரணத்தையும் இராணி தெளிவாகச் சொன்னுள்.

*கேரளவர்மன் :* காரணம் சரியானல், சம்மதிப்போம் ; பறனுட்டும்.

*தளவாய் :* நமது நாட்டு நிலைமை அபாயமாயிருக்கிறது. ஔரங்கஜேப் கோல்கொண்டாவைப் பிடித்து விட்டார். முகல் சேனை தெற்கே வருகிறது. ஜுல்ஃபிகர்கான், செஞ்

சியை வளைத்துக்கொண்டிருக்கிறான். தஞ்சை மதுரை நகரங்களை நோக்கி முஸல்மான் வெள்ளம் வருகிறது. தஞ்சையில் எக்கோஜி, நண்பனு யிருந்தான். இப்போதுள்ள ஷாஜிராவ் ஒரு மாதிரி. இந்தப் பகைவரிட மிருந்தெல்லாம் நாட்டைக் காக்க, ஏராளமான பணம் வேண்டும். இராணி, தனக்குச் சொற்பமாகவே செலவிடுகிறாள்; ஏராளமான தானதருமங்களைச் செய்கிறாள். நமது நாட்டுக்கே அவள் ஒரு பெரிய கோட்டைபோல் பாதுகாப்பாயிருக்கிறாள். அவள் செய்யும் நன்மை, பொது நன்மை. அதன் செலவை நாமே பகுந்து தாங்கவேண்டும். தாங்கள் தரும் கப்பம், அடிமைத்தனத்திற்கு அடையாளமன்று; அரசியற் செலவிற்கு நன்கொடையே யாகும்.

கேரளவர்மன் : கேரளம், தருமத்தின் மேல் நிலைநிற்கிறது. தமிழர் பாதுகாப்பிற்கான நன்கொடையைத் தரத் தடையில்லை.

தளவாய் : சந்தோஷம். அரசே, இனி நாம் நண்பர். வீரத்தேவா, நிறுத்து போரை! நமது காரியம் வென்றது. வீணுக இரத்தம் சிந்துவானேன்? தொண்டைமான், நமது சேனை இனி மதுரையை நோக்குக!

வீரத்தேவன் :

[தமிழ்க்கொடிக்கு மாலைசூட்டிப் பிடித்து]

வெற்றி வெற்றி வெற்றி யென்று
வீரராக முன்செல்வோம் ;
ஒற்றுமையும், உண்மையன்பும்
உலக மெங்கும் நாட்டுவோம்.

நிமிர்ந்து செல்....!

எல்லாரும் : ஹர ஹர, மஹாதேவ !

[செல்லல்]

---

## இரண்டாங் காட்சி

[இராணி மங்கம்மாள், சௌராஷ்டிரருக்கு பிராமணர் என்று பட்டயம் தந்தாள். சௌராஷ்டிரப் பிராமணர், அதைக் கொண்டாட இராணி படத்துடன் ஊர்வலம் வந்து, பொதுக்கூட்டத்தில் பேசுதல். இராமாசாரி பேசுகிறார்.]

சௌராஷ்டிரர்: மகாராணி மங்கம்மாளுக்கு ஜே....தருமமும் நீதியும் தவறாது நம்மை ஆளும் அரசி வாழ்க, வாழ்க!

இராமாசாரி: சௌராஷ்ட்ர சகோதரர்காள், நாம் செய்த கிளர்ச்சி வென்றது. நாம் அந்தணர்; பரம சாத்விகத் தொழிலான நெசவினால் சாது ஜீவனம் செய்பவர்கள் நமக்குப் பூணூல் உண்டு; காயத்திரி யுண்டு. இதெல்லாம் அறிந்த நமது மகாராணி, இன்று நமக்குப் பட்டயம் கொடுத்தாள்.

எல்லாரும்: மகாராணி நீடு வாழ்க!

இராமாசாரி: சௌராஷ்ட்ர சகோதரர்காள், நமது சமூதாயத்திற்கு மட்டுமன்று பொது ஜனங்கள் எல்லாருக்குமே நமது இராணி தாய்போல் அன்புடன் நன்மை செய்கிறாள். அரசி, தருமத்தை உயிர்போலக் காக்கிறாள். திருமலை, சொக்கலிங்க நாயக்கர்

காலத்தில் இருந்த போர்கள் இல்லை. சரியான சேனுபலம் உள்ளது. நாட்டில் இராணி சமாதானத்தை நிலைநாட்டினுள். துஷ்டரை ஒற்றரால் அறிந்து அடக்கினுள். விஷப்பூச்சிபோல் உள்நாட்டை அழித்த இரகசியப் புரட்சிகளை யெல்லாம் கண்டு பிடித்து நசுக்கினுள். பகைவருக்குக்கூட அவளிடம் ஒரு தனி மரியாதை ஏற்பட்டிருக்கிறது. இராணி, பரம தெய்வ பக்தை; மதுரை, திருப்பரங்குன்றம், உத்தமபாளையம், திருக்காளத்தி, திருச்சி முதலிய திருப்பதிகளில் திருப்பணிகள் செய்திருக்கிறுள்; சத்திரங்கள் கட்டி ஏராளமான அன்னதானம் செய்கிறுள். பக்கிரி பரதேசி எல்லாருக்கும் சாதிமத வேறுபாடில்லாமல் இராணி தருமம் செய்கிறுள்; நாடெங்கும் சாலைகளும் சோலைகளும் மண்டபங்களும் குளங்கிணறுகளும் அமைத்து எவ்வளவோ நன்மை செய்திருக்கிறுள். மங்கம்மாள் பெயரை, அவள் அமைத்த சாலைகளே என்றும் சொல்லும். நமது இராணி, நாட்டில் பல தொழில்களை வளர்த்து ஏழைகளுக்கு உழைப்பும் பிழைப்பும் தந்து வறுமையை நீக்கி யிருக்கிறுள்; புது மண்டபத்திலும் மற்ற இடங்களிலும் வியாபாரிகளுக்குக் கட்டிடம் அமைத்துக் கொடுத்திருக்கிறுள் ; விவசாயிகளுக்கு நீர்வசதி ஏற்படுத்தி யிருக்கிறுள் ; நிலமும் முதலும் தந்துதவுகிறுள். வரி வருமானத்தில், கல்விக்கும் தொழிலுக்கும்

ஏராளமாகச் செலவிடுகிறாள். தான் எளிய வாழ்வு வாழ்ந்து, தானதருமங்கள் நிரம்பச் செய்கிறாள். இத்தகைய இராணியின் குடைக் கீழ் நமக்கும் இன்று நீதி கிடைத்தது வியப்பன்று. மகாராணிக்கு நமது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். மகாராணி இன்னும் பல்லாண்டு நீதியை நிலைநாட்டி வாழ்க!

**எல்லாரும்:** மகாராணி, தருமவதி மங்கம்மாளுக்கு ஜே!

[கூட்டம் கலைதல்]

---

## மூன்றாங் காட்சி

[மங்கம்மாள் தர்பார். இராணி செங்கோல் பிடித்து அரியணை வகித்தல். மந்திரி திலகம், அழகிரி, வேங்கட நாய்க்கன் முதலியோர் வீற்றிருத்தல்.]

மாகதர் : [பாடுகின்றனர்]

ஜய ஜய தர்மரக்ஷகி, மகாராணி
மங்கம்மாளுக்கு ஜயஜய ஜயபராக் !

[அதிர்வெடி]

* * *

வீ ரமும் புகழும் ஓங்க,
விதவிதக் கலைகள் ஓங்க,
தீரமும் அறிவும் ஓங்கத்
திருவுடன் செல்வம் ஓங்க,
பூரணன் அருளால் எங்கள்
புண்ணிய வரசி கீர்த்தி
பாரெலாம் பரவி யோங்கப்
பரிதிபோல் வாழ்க மாதோ !

மந்திரிகள் : அறமே காக்கும் அரசி வாழ்க !

மங்கம்மாள் : ஆம். அறமே நம்மைக் காக்கிறது. இறைவன் அருள்க ; என்னுயிரான மன்னுயிர் வாழ்க ! அமைச்சர்காள், நமது நாட்டில் ஒருவர் பட்டினி யிருந்தாலும், நாம் உண்ணுஞ் சோறு நஞ்சு போலாகும். நாட்டில்

உழைப்பும் பிழைப்பும் பெருகினல், வறுமை நீங்கும். அதற்காக நாம் சில சாலைகளும், சோலைகளும், தருமசத்திரங்களும், திருப்பணி களும் தொடங்கினேம்; அவை எந்தமட்டில் இருக்கின்றன ?

மந்திரி திலகம்: மாண்புள்ள மகாராணி உத்தரவுப்படியே எல்லாம் முறையாக, விரை வாக நடக்கின்றன. உள்நாட்டு மந்திரி விவ ரம் சொல்வார்.

அழகிரி: 'மங்கம்மா சாலை' என்ருல் நாடெங்கும் தெரியும். பழனி, திண்டுக்கல், திருச்சிராப்பள்ளி, மேலூர், திருமங்கலம், திரு நெல்வேலி, சிவகங்கை, தொண்டி, இராமேஸ் வரம் முதலிய இடங்களுக்குச் செல்லும் சாலைகள் எல்லாம் நல்ல பாதுகாப்பில் உள் ளன. வழிநெடுக அத்தி, ஆல், வேம்பு, புளி, நாவல் முதலிய மரங்கள் தழைத்திருக்கின்றன; இடையிடையே மண்டபங்களும் உள்ளன; இந்தச் சாலை வேலை, பல்லாயிரக்கணக்கான ஏழைகளுக்கு உணவளித்தது. சத்திரஞ் சாவடிகள், கோயில் திருப்பணிகள், தருமசாலை கள், வியாபாரிகளுக்குக் கடைகள், இன்னும் எத்தனையோ கட்டிட வேலைகளால் ஏழை களுக்கு உழைப்பும் பிழைப்பும் கிடைக்கின் றன.

மங்கம்மாள் : சந்தோஷம்; அமைச்சர்காள், மடமை, வறுமை—இரண்டே நாட்டை வருத்தும் பீடைகள். அறிவுந் தொழிலுங் கொண்டு இவற்றுடன் போர் புரிகிறோம். வருமானத்திற் சரிபாதி, கல்விக்கும் தொழிலுக்கும் செல்கின்றன. நமது அரசில் கல்வியும் கலைகளும் தழைக்கின்றனவா? புலவர் வறுமையின்றி வாழ்கின்றனரா?

மந்திரி திலகம் : அரசியாரே, ஒவ்வொரு கிராமத்திலும் கோயிலுடன் பள்ளிக்கூடமும் கட்டியிருக்கிறோம். படிப்பு இனம்; கலைவாணருக்குத் தகுந்த சன்மானம் கிடைக்கிறது; நாடெங்கும் வேதமும் கீதமும் வித்தையும் முழங்குகின்றன.

மங்கம்மாள் : அமைச்ச, கல்விக்கு எல்லையில்லை; அதன் வளர்ச்சிக்கு வரம்பில்லை; நமது நாட்டில் நூற்றுக்கு நூறு பேர் எழுதப் படிக்க வேண்டும். தெருவுக்குத் தெரு பள்ளிக்கூடம் போடவேண்டும். அதற்கொரு திட்டம் தயாராகட்டும்!

மந்திரி திலகம் : கல்வி மந்திரி நாடெங்கும் சுற்றி நிலையறிந்து திட்டம் வகுக்கிறார்; பார்வைக்கு வரும்.

மங்கம்மாள் : சரி; பயிர்த்தொழில் உயிர்த் தொழில்; விவசாயிகளுக்குத் தட்டில்லாமல் நீர்

வசதி கிடைக்கிறதா? நமது நாட்டில் எந்த விவசாயியும், 'நிலமில்லை, ஏரி இல்லை, முதலில்லை' என்று ஏங்கி நிற்கக்கூடாது.

அழகிரி : விவசாயத் துறை திறமையுடன் வேலை செய்கிறது; திருமலை நாயக்கர் வகுத்த நீர்ப்பாசனங்கள் பயிருக்கு உதவுகின்றன. ஆறில்லா ஊர்களில் நல்ல கேணிகளும் ஏற்றக் கிணறுகளும் வெட்டிக் கொடுத்திருக்கிறோம். ஏர் பிடிக்கும் உழவருக்கெல்லாம் நிலம், விதை நெல், முன் பணம் முதலியன தட்டில்லாது கிடைக்கின்றன. நாடு, பொன்னும் பசுமையும் பொலிகிறது. மற்றைத் தொழில்களும் அப்படியே செழிக்கின்றன.

மங்கம்மாள் : தொழிலாளரே நாட்டின் நரம்பு; அவர்கள் எக்குறையுமின்றி வாழ்க! அடுத்தது, சமயம்; அன்பும் ஒழுக்கமும் வாழ்விற்கு இன்பமாகும்! மந்திரி, நமது நாட்டில் தெய்வபக்தி பரவவேண்டும், தருமப் பிரசாரம் நடக்க வேண்டும். கோயில் சந்நிதிகள், கலை நிரம்பி யிருக்கவேண்டும். தானதருமங்கள் தாராளமாக நடக்கவேண்டும்.

மந்திரி திலகம்: அரசியார் திருவுள்ளம் நடக்கிறது. மதுரை, பழனி, சோழவந்தான், திருக்காளத்தி முதலிய முக்கியமான இடங்களிலெல்லாம் மகாராணியின் அன்னக்கொடி

பறக்கிறது. பக்கிரி பரதேசிகள் முதல் யாவருக்கும் சாதிமத வேறுபாடில்லாமல் அன்னதானமும் நடக்கிறது. தருமப் பிரசாரகர் ஊர்தோறும் தொண்டு செய்கிறார்கள்.

மங்கம்மாள் : அமைச்சர்காள், இறைவன் ஒருவன் ; எல்லாம் அவன் மயம் ; மதவெறியில்லாமல் எல்லாரும் இந்தச் சமரஸத்துடன் நடக்கவேண்டும். அதற்காகவே திருமலை நாயக்கர் போல், நாமும் கிறிஸ்துவருக்கு இடம் கொடுத்திருக்கிறோம் ; இந்து, முஸல்மான், கிறிஸ்துவர் - இம்மூவரும் அவரவர் சமயம் போற்றிப் பிறரை மதித்து நடக்கிறார்களா ?

மந்திரி திலகம் : ஆம் ; குடிகள் மனம் இந்தச் சமரஸத்தில் வேரூன்றியது. நமது அரசில் சாதிமதப் போர் கிடையாது.

மங்கம்மாள் : நீதிச் சக்கரம் அமைதியாய்ச் சுழல்கிறது ; என்றாலும், விருப்பும் வெறுப்பும், நட்பும் பகையும் உலகின் இயல்பு ; எவ்வளவு கவனமாயிருந்தாலும் உள்ளே புரட்சியும் வெளியே படையெடுப்பும் கிளம்பும். இந்தக் காலம், அடுத்த நிமிஷம் எது வருமென்று சொல்ல முடியாது. நமது சேனைபலம் இன்னும் பன்மடங்காக வேண்டும். மந்திரி, வெளி நாட்டரசர் நிலை எப்படியிருக்கிறது ?

வேங்கடப்பன் : அரசியாரே, ஜுல்ஃபிகர் கான் சேனை திருச்சியை நோக்கி வருகிறது; தஞ்சையில் ஷாஜி ராவ் போக்கு, அங்கும் இங்குமாயிருக்கிறது. இங்கே பகிரங்கமான புரட்சி அடங்கியது; என்றாலும், சில இடங்களில் சதிக்கூட்டங்கள் இல்லையென முடியாது; நம் ஒற்றர், கண்ணில் திரிபோட்டுக் கவனிக்கின்றனர்.

மங்கம்மாள் : வெளிப் பகைவரை எதிர்க்கச் சேனைபலம் உள்ளது; இன்னும் சேர்ப்போம்; உட்பகை நாட்டை உலேக்கும்; அதைக் கவனமாக நீக்கவேண்டும். குடிகளுக்கு மனக்குறை ஏதாவது உண்டா?

அழகிரி : மனமிருக்குமட்டும் குறை யிருக்கத்தான் செய்யும்.

மந்திரி திலகம் : மனித சக்தியால் முடிந்த மட்டும் குறைநீக்கி யுள்ளோம்; இராணியின் அன்பரசில் பகைக்கும் கலகத்திற்கும் இடமில்லை.

அழகிரி : உண்டு.

மந்திரி திலகம் : எப்படி? கனம் வெளி நாட்டு மந்திரி, தமது மனத்தை விட்டுப் பேசுவாரா?

அழகிரி : மனத்தை விடாமலே பேசுகிறேன்; உள்ளதை மழுப்புவானேன்? இள

வரசனுக்கு வயது வந்தது; இன்னும் பட்டங் கட்டவில்லை; இதைப்பற்றிய புகார் பலமா யிருக்கிறது; புகார் புரட்சியாக வளர்ந்தாலும் வியப்பில்லை.

மந்திரி திலகம்: இதற்குத் தகுந்த சமா தானம் உண்டு; நம் மகாராணிக்கு அரி யணைப் பித்தமில்லை: ஆட்சிப் பேராசை யில்லை.

அழகிரி: (மனதுள்) ஐயோ, உன் ஆசை தான் அவளைப் பிடித்தாட்டுகிறதே!

மந்திரி திலகம்: அரசியார் சித்தம் சிவ னிடம் செல்கிறது.

அழகிரி: (மனதுள்) சிவலோகம் செல் லட்டும்!

மந்திரி திலகம்: நீண்டகாலம் வீசிய போர்ப்புயல் இப்போதே ஒருவாறு அடங்கி யிருக்கிறது.

அழகிரி: (மனதுள்) இனி, பலவாறு கிளம்பும்.

மந்திரி திலகம்: இன்னும் நாற்புறமும் அபாயங்கள் வந்துகொண்டிருக்கின்றன. பீஜ பூரைப் பிடித்த பாதுஷா தெற்கே கண் ணோட்டுகிறான்; செஞ்சி முரசம் கேட்கிறது; தஞ்சை ஷாஜியின் சித்தத்தை யாரோ கலைத்து

விடுகிறார்கள்; உள்நாட்டிலும் இரகசியக் கூட்டங்கள் நடக்கின்றன; ஒற்றறிக்கையால் தெரிகிறது. இது வல்லவன் காலம்; இப்போது நம இராணி செங்கோலைக் கீழே வைத்தால் பகைவர் சூழ்வர்; இரத்தம் பெருகும்; அமைதி குலையும்; மன்னுயிர் வருந்தும்.

**மங்கம்மாள் :** அமைச்சர்காள், மந்திரி திலகம் சொன்னதே நாம் அரியணை வகிக்கும் காரணமாகும். எம் பேரனுக்குப் பட்டஞ்சூட்ட யார் சலுகையும் தேவையில்லை; இப்போது விஜயரங்கனுக்கு விபரம் தெரியாது. உரிய காலத்தில் அவனுக்கு அரியணை தருவோம்; அப்போது நாம் அரசியற் சுமையை நீத்து அரனடிபற்றி வாழ்வோம்; அறிக! மந்திரி திலகம் வற்புறுத்தியதால் இந்த இடத்தில் இருக்கிறோம். இதோ இப்போதே கேரள வர்மன் புரட்சிக்கொடி நாட்டிப் போர் முறுக்கினான். மேற்கிலிருந்து நல்ல செய்தி வர வேண்டும்.

[ஓடிவருதல் **வீரத்தேவன்**]

**வீர :** வந்தது நல்ல செய்தி;
வஞ்சியும் இணங்கிக் கப்பம்
தந்தது; வாகை சூடித்
தமிழ்ப்படை தழைத்ததம்மா!
முந்து நான் வந்தேன்; வெற்றி
முரசொலி யதனைக் கேளாய்!
சந்ததம் தருமம் வாழ்க,
சத்தியம் வெல்க மாதோ!

**மங்கம்மாள்:** சுப சமாசாரம்! வீரத்தேவ, இந்தா பதக்கம்! மந்திரி, வெற்றிச் சேனையைப் படை மைதானத்திற்கண்டு பரிசளிப்போம்.

**எல்லாரும்:** அறங் காக்கும் அரசிக்கு வெற்றி, வெற்றி!

[சபை கலைதல்]

---

## நான்காங் காட்சி

[படை மைதானம். கொடிகள் பறக்கின்றன; இராணி அலங்கார மேடையில் விளங்குகிருள்; **தளவாயும், தொண்டைமானும், வீரத்தேவ னும்,** மேடையின் அடியில் கம்பீரமாக நிற்றல். இளவரசன் மேடையின் இடப்புறம் வீற் றிருக்கிருன்; அவனுடன் **அழகிரி** இருக்கிருன். படைகள் வெற்றிநடனம் புரிகின்றன. தள வாய் அவற்றை நடத்துகிருன். படைமுரசு ஒலிக்கின்றது.]

[வீரரெல்லாம் பாடி ஆடுதல்]

இராகம் : குந்தலவராளி] [தாளம் : திஸ்ர ஏகம்

**வெற்றி வெற்றி யென்றுசொல்லி**
**வேகமாக முன் செல்வோம்.**
**ஒற்று மையாய் வாருங்கள்**
**உடன் பிறந்த தோழர்காள்!** க

**பூரணன் புகழைப் பாடிப்**
**புண்ணியம் அறிந்து நாம்**
**பார் முழுதும் கோயிலாகப்**
**பார்த்துத் தொண்டு செய்குவோம்.** உ

ஏகமாக வுள்ள மொன்றி
இன்பமான தோழர்கள்,
வேகமாகக் கால்கள் வீசி,
வீசிவீசி முன்செல்வோம்! ங

வைய மெல்லாம் சாந்தமாக
வாழத் துன்பந் தாழவே,
தெய்வ பக்தி ஜீவபக்தி
தேச பக்தி செய்குவோம்! ௪

பொய்ய டிமை வஞ்சகம்
பொருமை நோயைப் போக்குவோம்.
மெய்யறிவும் தூய தொண்டும்
வேத வாழ்வும் போற்றுவோம்! ௫

தோளுயர்த்தித் தலை நிமிர்ந்து
சோர்விலாத வீறுடன்
நாளும்கல்வி செல்வ மோங்கி
நாடு வாழ முன்செல்வோம். ௬

எத்திசையும் கீர்த்தி யோங்கி
எங்கள் அன்னை வாழவே,
சக்தி பெற்ற வீரராகத்
தாவித் தாவி முன்செல்வோம்! ௭

[நடனம் நிற்கின்றது.]

மங்கம்மாள்: படைத் தலைவர்காள், வீரர்காள், உங்கள் அனைவருக்கும் ஆற்றலும் ஆண்மையும் பெருகுக; வெற்றிமேல் வெற்றி வருக! கேரள நாட்டில் நீங்கள் செய்த வீரப்போர், அதிக இரத்தம் சிந்தாமல் வென்றது; கேரள வர்மனுக்குத் தளவாயும், தொண்டைமானும் சொன்ன நன்மொழிகளையே நாம் குடிகளுக்கும் சொல்லுகிறோம். தென்னாட்டில் ஒற்றுமை காட்டுவோம். எல்லாரும் வீறுபெற்ற திராவிட சமுதாயமாக வாழ்வோம். நமது மனமும்,

வாழ்வும் தமிழருடனும் தமிழூடனும் ஐக்கியமாகி விட்டன; இதைக் கேரளவர்மன் அறிந்தது பற்றி மகிழ்ச்சி! இந்தப் போர் எழுந்தது பேத புத்தியால்; அது விலகியதும் சமாதானம் ஏற்பட்டது. பேதபுத்தி யென்னும் பனியைச் சமரஸச் சுடரால் விலக்குங்கள்; ஒற்றுமை துலக்குங்கள்! பிறகு நமது சக்தி பதின்மடங்காகும்.

**எல்லாரும் :** ஒற்றுமை வாழ்க!

**மங்கம்மாள் :** இந்தப் போரில் நமது பக்கம் இருந்துதவிய புதுவைத் தொண்டைமானின் அருமை பெருமை உங்களுக்குத் தெரியும். அவர் செய்த உதவிக்கு நன்றி பாராட்டி இந்த வைரவாளைப் பரிசளிக்கிறோம்! [தருதல்]

**தொண்டைமான் :** மகாராணி கருணையுடன் தந்த பரிசை நன்றியுடன் ஏற்கிறேன். இங்கே தருமம் இருக்கிறது; அதைக் காக்க எந்தச் சமயம் அழைத்தாலும் கருமவீரத்தைக் காட்டித் துணை செய்வேன்.

**எல்லாரும் :** தொண்டைமான் வீரம் வாழ்க!

**மங்கம்மாள் :** தளவாய் நமது படையைத் திறமையுடன் நடத்தினர்; தமது நயமொழியால் சேரமானை இளக்கினர்; தளவாயின் வாளையும் வாக்கையும் மெச்சி, இந்தப் பதக்கமும், கேடயமும் பரிசளிக்கிறோம். [தருதல்]

எல்லாரும்: தளவாய்ச் சிங்கம் வாழ்க!

தளவாய்: மகாராணி தந்ததை நன்றியுடன் ஏற்கிறேன்..........

மங்கம்மாள்: நம் படைவீரரிற் சிறந்த வீரத் தேவருக்கு இந்த ஈட்டியை அளிக்கிறேன். [அளித்தல்]

வீரத்தேவன்: மகாராணி திருக்கரத்தால் அளித்த ஈட்டி பகைவரை வாட்டுக; நமது புகழை வானுயர நீட்டுக!

மங்கம்மாள்: சேனைவீரர்காள், உங்களுக்குப் பரிசு விஜயதசமியன்று கிடைக்கும்; அன்று ஒரு வீரத்திருநாள் நடத்துவோம். நாட்டிலுள்ள வீரர் அனைவரும் தமது திறமையைக் காட்டும் நாள் அது; தயாரா யிருங்கள்!

இதனுடன் இன்று நிகழ்ச்சி முடிந்தது.

[படைவீரர் வாளுருவி அணியணியாக இருபுடையும் வருதல்; முரசு கொட்டல்; இராணி அரண்மனைக்குச் செல்லல்.]

---

## ஐந்தாங் காட்சி

[உள்நாட்டு அமைச்சன் அழகிரி, பொறாமையால் மங்கம்மாளைக் கவிழ்க்கச் சூழ்ச்சி செய்கிறான்; இளவரசன் மனத்தைக் கலைக்கிறான். பங்காரு என்னும் சதிகாரன் தஞ்சாவூர் மராட்டிய மன்னரின் பகையைத் தூண்டத் துணை செய்கிறான்.]

அழகிரி: தயாராகவே யிருக்கிறோம்; ஆம் தயார்; ஒருவாரம் பொறுத்திரு! மந்திரி திலகத்துடன் உன்னைக் கூண்டில் அடைத்துப் பிறகு நான் யார் என்பதைக் காட்டுகிறேன். அமைச்சர் திலகமாம்; அந்தப் பார்ப்பான் சொல்வது தேவ வாக்கு; நான், சொக்கலிங்க நாயக்கர் காலம் முதல் இந்த மதுரையில் மந்திரித் தொழில் புரிந்த நான், சொல்வது அலட்சியம். விஜயரங்கனுக்கு விவரம் தெரியாதாம். நானன்றோ அவனை ஆளாக்கினேன்? [வருதல் விஜயரங்கன்] ஆ, ஆயுசு நூறு; வருக, வருக; என் அருமை மன்னர் வருக!

விஜயரங்கன்: ஹ, ஒன்றும் பிடிக்கவில்லை!

அழகிரி: நான் கூடவா?

*விஜயரங்கன் :* தாங்கள் ஒருவர்தாம் எனக்குப் பிடித்தம்.

*அழகிரி :* பாட்டி இராணி....?

*விஜயரங்கன் :* சை; நேற்று அவள் குட்டு வெளுத்துப் போனது!

*அழகிரி :* கண்மணி மன்ன, இப் பெண்பிள்ளை தங்களை எப்படி ஒதுக்கிப் பேசினுள்! இந்தப் பாண்டிய மண்டலம் யாருடையது?

*விஜயரங்கன் :* என்னுடையது.

*அழகிரி :* பட்டம் யாருக்கு?

*விஜயரங்கன் :* எனக்கு.

*அழகிரி :* வயது வந்த ஆண் சிங்கத்தின் கையில் அரசுரிமையை ஒப்படைக்காது இப் பெண்பிள்ளை ஏன் முரண்டு செய்கிருள்?

*விஜயரங்கன் :* அவ்வளவு நெஞ்சுரம்; அக்கிரமம்! என்னைக்கண்டால் அவளுக்குப் பிடிக்கவில்லை. என் உரிமையைப் பெற வேண்டும். இவளை நான் ஒரு கை பார்ப்பேன்.

*அழகிரி :* தங்களை அரியணையேற்றி, 'மன்னர் பெருமான் வாழ்க' என்று வாழ்த்தும் நாள் இதோ வருகிறது!

*விஜயரங்கன் :* அந்தக் கார்க்கோடகி விட மாட்டாள்; எப்படியோ ஜனங்களை வசப் படுத்திவிட்டாள்.

அழகிரி : மகாராஜா, பணத்தை அள்ளி விட்டு ஆட்களை மயக்குகிறாள். மகாராஜா, நேற்று பார்த்தீர்களா; எவ்வளவு தான தருமங்கள்! கஜானா காலி; இன்னும் இரண்டாண்டுகள் இப்படி நடந்தால், பிறகு தாங்கள் பட்டந்தரிக்கும்போது கடன்தானிருக்கும்.

விஜயரங்கன் : என்ன செய்வது? முன்னே அவளிடம் பாட்டி என்று அன்பிருந்தது; இப்போது அவளைப் புலிபோல் அஞ்சுகிறேன்.

அழகிரி : அஞ்சுவதேன்? இப்புலியைப் பலமான கூண்டில் அடைக்க ஒரு வழி செய்துள்ளேன்.

விஜயரங்கன் : மந்திரி திலகம் உள்ளமட்டும் எதுவும் செல்லாது. அவன் அவளுடைய ஆசை மந்திரி.

அழகிரி : அந்தக் காதல் திலகத்தை, ஆசை மந்தியை, அதே கூட்டில் அடைத்து வேடிக்கை பார்ப்போம். விஷயம் இரகசியமாகவே நடக்கிறது. மகாராஜா மட்டும் எல்லாம் மனதுக்குள் வைத்துக் கொள்ளட்டும். பாட்டியிடம் நெருங்க வேண்டாம்!

விஜயரங்கன் : அவள் மண்டை நொறுங்க வேண்டும். அதுவே எனக்கு நல்லது.

[இவருக்குப் பின்னால் ஒருவன் மாறுவேடம் புனைந்து கவனித்து மெல்லச் செல்லுகிறான். வருதல் பங்காரு]

*அழகிரி :* இதோ, பங்காரு தஞ்சாவூரி லிருந்து வந்திருக்கிறான். அவனோடு சிறிது பேசி வருகிறேன்.

*விஜயரங்கன் :* எனக்கு ஆத்திரம் வரு கிறது. நான் போய்ப் பாட்டியைக் கண்டிப் பாகக்கேட்கிறேன். "நான் மரக்கட்டை என்று நினைத்தாயா ? கொடு அரசை !" என்கிறேன்.

*அழகிரி :* அதுதான் வீரம்; அரசனுக் கழகு ஆத்திரத்துடிப்பு............இடித்திடித்து, நான் சொன்னது போலக் கேட்கவேண்டும்.

[விஜயரங்கன் போகிறான்]

*பங்காரு :* தண்டமண்டி! காரியம் ஆயி போச்சண்டி! ஷாஜி மன பக்கம். இதோ, கடிதம்........!

*அழகிரி :* சபாஷ் பங்காரு, நல்ல வேலை செய்தாய்! உடனே இந்தக் கடிதத்தைத் தஞ்சாவூர் ராயருக்குக் கொண்டு செல்! ஒரு நாள் தாமதமானால், நமது காரியம் வீணாகும். இன்னும் ஏழே நாள்; பிறகு நானே அர சன்........ [கடிதம் தருகிறான்]

*பங்காரு :* அது சரி. இதோ ஒரே பாய்ச் சலில் தஞ்சாவூர்........செல்கிறேன்.

[போகிறான்]

*அழகிரி :* வெடி வைத்து விட்டேன்! பங்காரு அதிகம் பேசமாட்டான். ஆனால் சூழ்ச்

சியில் வல்லவன். ஒரு பொறிதான் இனி வேண்டும்! ஷாஜிராவ் என்ன எழுதியுள்ளார்? (படித்து) நமக்கு அனுகூலமாகவே எழுதியுள்ளார்: "ஒரு பெண், இவ்வளவு துணிவாக ஆளுவது நமக்கு ஆச்சரியமாயிருக்கிறது! இவளை உடனே அடக்கி, விஜயரங்கனுக்குப் பட்டமளிக்கா விட்டால் இத்தனை ஆண் பிள்ளைகளுக்கும் அவமானம். நமது சேனைத் தலைவன் ராகோஜி தயாரா யிருக்கிறான். சமயம் தெரிவித்ததும் மராட்டிய வீரர்களுடன் வருவான்." சமயம் தெரிவித்தாயிற்று; இனிச் சந்தர்ப்பம் தயாராகட்டும்....

[போகிறான்]

## ஆறாங் காட்சி

[தஞ்சாவூர் சாலை: ஒரு மண்டபத்தில் பங்காரு களைப்பாக உட்கார்ந்திருக்கிறான். ஒரு பரதேசி வருகிறான்.]

பரதேசி :

தனதந்தி நாதந்தி நானே நானே
சங்கரா சங்கரா சம்போ !

ஆணுக்கும் பெண்ணுக்கும் சண்டை—இந்த
அக்கப்போ ராலே யுடைவது மண்டை

ஆணவம் பேசுது தொண்டை—இங்கே
அல்லலுக் கெல்லாம் அடிப்படை கொண்டி !
சங்கரா சங்கரா சம்போ !

பங்காரு : சாமிகாரா ! பதாராண்டி ! எக்கட போதுன்னாரு.

பரதேசி : சிவோஹம் ! சிவஷண்முகா ! சுவாமிமலைக்குப் போகிறேன்.

பங்காரு : சரி, விபூதி ஈயண்டி.

பரதேசி : சிவஷண்முகா ! ஓம் சரவணபவ குக.......

[தான் கொஞ்சம் இட்டுக்கொண்டு, விபூதி தருகிறான்]

தாங்கள் எங்கே செல்வது ?

பங்காரு : உத்தரம்.

பரதேசி : [தனது பையை அவிழ்த்துக் கொஞ்சம் அபின் எடுக்கிருன்] ஐயா சாப்பிடுமா ?

பங்காரு : ஆஹா, ஹ ஹ ஹ !

பரதேசி : சாப்பிடட்டும். [அபின் தருகிருன். பங்காரு தின்று மயங்குகிருன்.] ஐயா படுத்துக்கொள்ளட்டுமே !

பங்காரு : அரரர அப்பா! சொக்கு—சோக்கு! சாமிகாரு இதி பூலோகமா, பரலோகமா ?

பரதேசி : (மனதுள்) இன்னும் கொஞ்சம் பொறு ; பரலோகம் சமீபத்தில் உள்ளது ! (புறத்தில்) ஐயா படுத்துக்கொள்ளட்டும். இதோ, இந்த வேட்டியைச் சுருட்டித் தலைக்கு வைக்கிறேன்.

[சுகமாகப் படுக்கை யமைத்துத் தூங்க வைக்கிருன்]

பங்காரு : ஹஹஹ....பங்காரம்ம....

பரதேசி : அம்மா, வருவாங்க ; ஐயா படுத்துக் கொள்ளட்டும்.

பங்காரு : குர்ரம் ?

பரதேசி : குதிரையா ? இதோ நான் பார்த்துக் கொள்ளுகிறேன்.

[பங்காரு படுத்துக் குறட்டை வாங்குகிருன். பரதேசி, வந்த உளவு வேலையைப் பார்க்கிருன்.]

பரதேசி: பாவிப்பயலே, இராணி தர்மவதி; அவள் கட்டிய மண்டபத்தில் தங்கி யிருக்கிருய்; அவள் போட்ட பாதையிலே நடக்கிருய்; அவள் பணத்தைச் சாப்பிடுகிருய். அவளுக்கே துரோகம் செய்கிருயா?

பங்காரு: குர்ர், குர்ர்..ரம்......[குறட்டை. திடீரெனக் கண் விழிக்கிருன்.]

பரதேசி: படுத்துக்கொள்ளட்டும். சரியான மயக்கம். இவன் கத்தியை அப்புறப்படுத்துகிறேன். [கத்தியை வெளியே எடுத்து ஒளிக்கிருன்.] மடியிலென்ன? [மடியிலுள்ள கடிதத்தை எடுக்கிருன்-] ஆ....சரி....சரி, ஷாஜிராவுக்கா?...........நல்லது. இதைப் பிறகு பார்ப்போம். முதலில் காப்பு மாட்டுவோம். [கைக்கும் காலுக்கும் விலங்கு மாட்டுகிருன்.] சரி, இனி உறங்கு; ஐந்து நிமிஷத்தில் கூண்டிலிருப்பாய். [வாளை எடுத்துக்கொண்டு குதிரை மேல் ஏறிச் செல்கிருன்]

பங்காரு: (விழித்து) ஹா! ஏமண்டீ! ஸ்வாமிகாரு...........ஹா! மோசம் சேசாடே! ஹா...........

[வருதல் இரண்டு வீரருடன் வீரத்தேவன்.]

வீரத்தேவன்: தூக்குங்கள் இவனை; வண்டியில் போட்டு நேராகச் சிறையில் கொண்டு தள்ளுங்கள்! சந்தடி கூடாது. விஷயம் வெளியே தெரியக்கூடாது!

[வீரர் தூக்கிச் செல்கின்றனர்]

பங்காரு: அரரரர! ஏமண்டி, கொலுசா? மோசம் போதினே........ராம் ராம்!

வீரத்தேவன்: ஐயாவுக்குத் தோடா; அப்படியே யிருக்கட்டும்.

[போதல்].

---

## ஏழாங் காட்சி

[மங்கம்மாளின் வீரக்கனல்]

மங்கம்மாள்: வாள் போல் பகைவரினும் கேள் போல் பகைவர் கொடியர்! என்ன சூழ்ச்சி! என்ன சதி! நான் ஒரு பெண் பிள்ளையாம்! இவர்கள் ஆண் பிள்ளைச் சிங்கங்களாம்! ஆம், இத்தனை நன்றி கெட்டு, தருமங் கெட்டு, உண்ட சோற்றிற்கு இரண்டகம் நினைக்கும் ஆண் பிள்ளைகளை இப்பெண் இந்த வீரப் பெண், என்ன செய்கிறாள் பார்! பெண் என்றால் அடிமை, பேதை, அபலை, அறிவற்றவள் என்று நினைத்தான் போலும்! ஆகட்டும் பெண்ணின் பெருமையை உணர்த்துகிறேன்! அன்று பாஞ்சாலி சபதஞ் செய்தது போல் இன்று மங்கம்மாள் சபதம் செய்கிறாள். ஆண்களானால் நேராக யுத்தத்திற்கு வரலாமே. பேடி போல ஒளிந்து, திருட்டுத்தனமான சூழ்ச்சிகள் செய்து என்னைப் பிடிக்க முயலும் இந்த அலிகளைப் பிடித்துச் சிறையிலிடாவிட்டால் நான் மங்கம்மாளல்லேன். அந்தச் சபதம் நிறைவேற்றத்தான் வெற்றித் திருநாளையும் ஒதுக்கி வைத்தேன். [வருதல் ஒரு பரதேசி]

சாமி வரட்டும்! எங்கிருந்து?

பரதேசி : சிவோஹம்! சச்சிதானந்தம்! அம்மா, சாலை மண்டபத்திலிருந்து வருகிறேன். இராணியம்மாளுக்குக் கொஞ்சம் சுவாமிமலைப் பிரசாதம் கொண்டு வந்திருக்கிறேன்.

மங்கம்மாள் : ஆ வீரத்தேவனா! வீராதி வீரனே, எனது மானம் காத்தாய்........

[பரதேசி வேடம் கலைத்து வீரத்தேவன் ஒரு கடிதம் தருதல்]

ஆ, இதென்ன ஷாஜிக்கு எழுதிய கடிதமா? இது எப்படிக் கிடைத்தது?

வீரத்தேவன் : படித்துப் பாருங்கள் முழுதும். இந்த அழகிரியின் அயோக்கியத்தனம் தெரியும்.

மங்கம்மாள் : ஆ, என்னுள் மகா காளியின் ஆவேசம் துடிக்கிறதே! இதென்ன? "மகாராஜாதி ராஜா ஷாஜிராவ் சத்ரபதி அவர்களுக்கு மந்திரி அழகிரி தாள் பணிந்த விண்ணப்பம் :—இங்கே எல்லாம் தயாராயிருக்கிறது. இந்தப் பெண்ணை மடக்க ஒரு நல்ல சூழ்ச்சி செய்துள்ளேன். இப்போதுதான் கேரளப் போர் புரிந்து மதுரைப் படை களைத்து வந்துள்ளது. படைவீரர் பலர் கிராமங்களுக்குச் சென்று ஓய்வெடுக்கின்றனர். இந்த வாரம் ஒரு வீரத் திருநாள் நடக்கப்போகிறது. அதற்கு நானே இடம் வகை

யரூக்கள் தயார் செய்கிறேன். கூட்டத்தில் பெரும்பாலும் என் வீரர்களே இருப்பார்கள். கூட்டம் முடிந்ததும் அருகே ஒரு மாளிகையில் நான் விருந்திற்கு ஏற்பாடு செய்துள்ளேன். அதைச் சுற்றித்தான் உங்கள் படை காவ லிருக்க வேண்டும். என் விரோதிகள் விருந் துண்ணும் போது, பசக்கென்று நான் எழுந்து வருவேன். அந்தச் சமயத்தில், நீங்கள் கண் ணுங்காவலுமாயிருந்து, உள்ளே புகுந்து கதவை அடைத்து விடுங்கள். விருந்திற்குப் பொறுக்கி யெடுத்த நம் ஐந்து விரோதிகளே வருவர். என்னுடன் இளவரசரும் வெளியேறி விடுவார். திங்கட்கிழமை நிசியில் தங்கள் சேனையை எதிர்பார்க்கிறேன். மேலும் நான் குறித்த இடம் இவள் காதலன் வீட்டிற்கு அருகே யுள்ளது. ஆதலால் கவனிக்கவும். அன்றிரவே இளவரசனுக்கு மகுடம் சூட்ட வேண்டும்!............''

ஹா! என்ன மோசம், வஞ்சம், சதி, கலகம்! இப்படித்தான் இருக்கிறது உலகம். இருக்கட்டும். இந்த அழகிரியை வெளி கறியாக்குகிறேன். பெண்ணிடம் கனலும் வீரக்காளி என்ன செய்கிறாளென்பதைக் காட்டுகிறேன். உயிரை வெறுத்தேன், உடலை வெறுத்தேன், உலகை வெறுத்தேன்! என் சபதத்தை முடித்தபின், இச்சங்கடங்களை

யெல்லாம் ஒரே யடியாகத் தீர்த்து விடுகிறேன்! வீரத்தேவரே, சங்கதி கேட்டீரா ?

**வீரத்தேவன் :** அம்மா, எல்லாம் தெரிந்தது தான். நான் கேரளத்திலிருந்து தர்பாருக்கு வந்ததும் அழகிரி பேசியது காதில் விழுந்தது. இளவரசர் கண்ணையும் பார்த்தேன்; உடனே வெளியே போனேன். பங்காரு உலாத்திக் கொண்டிருந்தான். அவனுடன் சிறிது பேசியதும் ஒரு சிறு குறிப் பறிந்தேன். பிறகு, தளவாய்ச் சிங்கத்திடம் சென்று வெற்றி முரசை நிறுத்தச் சொல்லி விட்டேன். பிறகு, பங்காருவை விடாது தொடர்ந்து சென்று இந்தப் பரதேசி அவனைச் சிறை செய்து இக்கடிதம் கொண்டு வந்தான்.

**மங்கம்மாள் :** ஜயமுரசம் ஏன் நிற்க வேண்டும் ? அது முழங்கட்டுமே !

**வீரத்தேவன் :** அம்மா, தங்கள் உயிருக்கு உலைவைக்கும் இந்தப் படுபாவிகள் உள்ளமட்டும் நமக்கு வெற்றி யேது? இவர்களைப் பூண்டோடு பொசுக்கி எரித்துவிட்டு, அவர்கள் சாம்பல்மீது வெற்றிகொட்டிக் கூத்தாடுவோம்! நான் வீரனானால், தமிழ் நாட்டு மறவனானால், இந்த அதர்மனை, நன்றி கெட்ட பதரை, என்ன செய்கிறேன் பாருங்கள் !

மங்கம்மாள் : ஆளை எதுவும் செய்ய வேண்டாம்; என்னை என்ன செய்ய விரும்பினனோ அதை அவனுக்குச் செய்யவேண்டும். உடனே தளவாய்ச் சிங்கமும் மந்திரி திலகமும் வரட்டும்!

வீரத்தேவன் : மகாராணி உத்தரவுப்படி!

[செல்கிறன்]

மங்கம்மாள் : [யோசனையில் ஆழ்ந்திருக்கிறள்.] ஆம், நான் காதலிக்கிறேன்! காதல் எனது உரிமை! அதைத் தடுக்க இவர்கள் யார்? கணவனை இழந்தவர் மறுவிவாகம் புரிய என்னரசில் உரிமையுண்டு! ஆணும் பெண்ணும் ஒரு நிகர், சரிசமன்!

[வருதல் தளவாய்ச் சிங்கம், மந்திரி திலகம்]

தளவாய் : மகாராணி நீடூழி வாழ்க! வணக்கம்!

மந்திரி : மங்களம் பொங்குக!

மங்கம்மாள் : வாருங்கள், இப்படி உட்காருங்கள். மந்திரி திலகம், இக்கடிதத்தைப் பார்க்கட்டும்; தளவாய்ச் சிங்கம் கேட்கட்டும்!

தளவாய் : அம்மையே, பார்த்தும், படித்தும், கேட்டும் அச்சதிகாரன் பங்காருவைச் சிறையில் மாட்டியும் இங்கு வந்தோம். வீரத்தேவன் பக்கா வேலை செய்தான். வாள் பிடித்து எழுந்தால், பங்காரு இருபது ஆளை

அடிப்பான். தந்திரத்தால் அவனை மடக்கிச் சிறையில் தள்ளினான் வீரன். அழகிரியும் இளவரசனும், மகாராணியையும் மந்திரி திலகத்தையும் கண்டபடி பேசினர். வீரத்தேவன் உளவறிந்து, பகைவனுக்குச் சீட்டுக்கொண்டு செல்லும் பங்காருவைப் பிடித்தான்!

மங்கம்மாள் : வீரத்தேவனுக்கு ஒரு ஜமேதார் உத்தியோகமும், ஒரு பதக்கமும் தருவோம்.

மந்திரி : வேடிக்கை முடியட்டும்; இன்னும் ஆபத்து உள்ளது. நல்ல வேளையாய் இக்கடிதம் ஷாஜிக்குப் போகாமல், நமது கையில் அகப்பட்டது. ஷாஜி கடிதத்தை எதிர்பார்த்திருப்பான். தங்களை இழிவாக மதித்து அடிக்கடி கலகம் தூண்டும் இந்த ஷாஜிக்கும் ஒரு பாடம் கற்பிப்போம். அவன் சேனை அடுத்த திங்கள் வரும்படி ஒரு தூதனிடம் பொய்க் கடிதம் அனுப்பலாம்.

மங்கம்மாள் : எனக்கு இந்தப் பொய் புனை சுருட்டுகள் வேண்டா. நானே எழுதுகிறேன். 'நேராகப் படைகொண்டு திங்களன்று வரலாம். என் சேனைகளும் விருந்திற்குத் தயாராயிருக்கின்றன. என் பகைவர்கள் எத்தனைபேர் வந்தாலும் சிறைக்கோட்டம் இடம் கொடுக்கும்' என்று எழுதுகிறேன், பயமென்ன? ஒரு

பெண்ணுக்கு எவ்வளவு வீரத் துணிவுள்ள தென்று உலகிற்கு நானே காட்டுகிறேன். தளவாய்ச் சிங்கம் அஞ்சுமா?

*தளவாய்:* அது நன்றாயிராது; நரிக்கு ஒரு பொறி வைப்போம். தஞ்சாவூர் நரிக்கு மதுரைச் சிங்கம் பயப்படுமா? இதோ, இன்றே 50,000 வீரர் தயார்! மராட்டியரை, வந்தவுடன் வளைத்து, அப்படியே இருட்டு மாளிகையில் கேப்பைக்களி தின்ன வைக்கிறேன்!

*மங்கம்மாள்:* அந்த நாளே வெற்றி நாள் - உண்மை! மந்திரி, முடிவான சூழ்ச்சி என்ன?

*மந்திரி:* எல்லாம் கிணற்றில் கல்போட்டது போலிருக்கவேண்டும். அழகிரி, திங்களன்று மராட்டியரை எதிர்பார்த்துத் தனது சதிகாரரைத் திரட்டிக் கொண்டிருக்கிறான். நம் சேனைகளை அங்குமிங்கும் ஒளியவைப்போம். வீரத்திருநாள் கொண்டாட்டம் திங்கள் மாலை 6 மணிக்கு மண்டபத்தில் நடக்கட்டும். அக்கம் பக்கங்களில் நமது சேனை ஒளிந்திருக்க இடம் உள்ளது. அழகிரியின் சதிகாரர் எல்லாரும் அன்று வந்து கூடுவர்; எல்லாரையும் வாளை வெளியே வைத்துவிட்டு உள்ளேவரச் சொல்வோம். நாம் மட்டும் வாயிலருகே, சட்டென்று வெளியேறும்படியான இடத்தில் உட்காருவோம். மண்டபத்தின் ஜன்னல்கள் இரண்டாள் மட்டத்திற்கு மேலே உள்ளன. ஏறிக்

குதிக்க முடியாது ; இரும்புக் கம்பிகள் போடப் பட்டுள்ளன. பின்புறக் கதவை முன்பே பூட்டிவைப்போம். வாட்களை யெல்லாம் நமது வீரர் கையில் கொடுப்போம். வீரர்களுக்குப் பரிசளித்ததும், சட்டென்று மகாராணியார் வெளியே செல்லட்டும். நானும் தளவாய்ச் சிங்கமும் அழகிரியுடன் வருகிறோம். அடுத்த கட்டிடத்தில் விருந்து ஏற்பாடா யிருக்கிறது. நம் சிப்பாய்களுக்கு மராட்டியர் உடை தரு வோம். வீரத்தேவன் ராகோஜி போலவே நடிப்பான். அவர்களைக் கண்டதும், அழகிரி நம்மை மிரட்டுவான். அப்போது நமது பலத் தைக் காட்டி அவனை உடனே............

மங்கம்மாள் : ஆம், உடனே......சரி, என் சபதம் பலித்தது! உறுதி வந்தது! இனிக் காரியத்தைப் பார்ப்போம். அது முடிந்ததும் 'நாம் கோழையில்லை, பெண் பேதையில்லை, இவளுக்கும் ஆண்மையுள்ளது' என்று தஞ்சா வூருக்குப் பாடம் கற்பிக்க வேண்டும். எழுந் திருங்கள்! விழித்திருங்கள்! வழி திறந்தது!

[எல்லாரும் செல்லல்]

---

## எட்டாங் காட்சி

[ஒரு பெரிய மாளிகை; அழகிரியின் சதிப் படை அதில் அடைபட்டுள்ளது; **இராணி, மந்திரி, தளவாய்** மூவரும் விரைந்து வெளியேறல்; தள வாய் மாளிகையை அடைத்துப் பூட்டி விடுகிருன்.]

[உள்ளே] ஹா . . . ஹா . . . . ஐயோ . . . . அத்தனை பேரும் கைதியானேமே . . . . இந்தப் பெண்ணை ஏமாற்ற வந்தோம். ஏமாறினேம்.

**தளவாய்:** வஞ்ச நரிகாள்........கப்சிப்........ மூச்சுவிட்டால் புதைகுழி........கவனம்........!

**மந்திரி திலகம்:** நல்ல காரியம்; இனி இவர்கள் வாலாட்ட முடியாது; இராணிக்கு வந்த பெரிய ஆபத்து ஒழிந்தது.......இதுவும் இரகசியமாய் இருக்கட்டும்.

**இராணி:** ஆம், விருந்து முடியுமட்டும்; அழகிரி, ராகோஜி படைகளையே எங்கும் காண வேண்டும்.

**மந்திரி திலகம்:** இங்கே நரியைப் பரியாக்கி, பரியை நரியாக்கி விளையாடினன் சிவன். நாமும் தமிழரை மராட்டியராக்கி விளையாடு வோம். வாருங்கள்!

(செல்லல்)

---

## ஒன்பதாங் காட்சி

[ஒரு மாளிகை, அதில் விருந்தினர் அமர்ந்துள்ளனர். **மங்கம்மாள்** கண்களில் தீப்பறக்கிறது. **தளவாய்ச் சிங்கம்** அழகிரியைச் செருக்குடன் பார்க்கிருன். **மந்திரிதிலகம்** அங்குமிங்கும் கண்ணைத் திருப்பிச் சுற்றிலும் நடப்பதை அறிகிருன். **அழகிரி** உபசாரம் செய்கிருன். எல்லாரும் வெற்றிமாலைகளைக் கழற்றிச் சுவரில் மாட்டியுள்ளனர். **விஜயரங்கன்** இராணியின் பக்கம் வீற்றிருக்கிருன்.]

அழகிரி : அம்மா, மகாராணி, தர்மவதீ, சாவகாசமாக, இருந்து, சாப்பிடுங்கள்! தங்களுக்கு இன்று அலுப்பு.

மங்கம்மாள் : தங்களுக்குத்தான் ஒரு வாரமாகத் தூக்கமில்லை; அலுப்பு....

அழகிரி : இராணியம்மா, காலைப் பிடிக்கிறேன். தங்கள் பாதசேவைக்காகத் தானே ஜன்மம் எடுத்தேன்.

மங்கம்மாள் : ஆஹா, உண்மை! சீக்கிரம் நமது பாதசேவை தங்களுக்குக் கிடைக்கப் போகிறது.

அழகிரி : மந்திரி திலகத்திற்கு என்ன வேண்டும்?

மந்திரி திலகம் : தங்களை வேண்டித்தான் இங்கு எல்லாரும் வந்திருக்கிறோம்.

அழகிரி : நான் செய்துள்ள ஏற்பாடெல்லாம் சரிதானே ?

மந்திரி ; தாங்கள் இவ்வளவு ஏற்பாடு செய்வீர்களென்று முன்பே தெரிந்துகொண்டு தான் வந்திருக்கிறோம்.

அழகிரி : மன்னர் மன்ன, என்ன வேண்டும்? எல்லாம் சரியா ?

விஜயரங்கன் : [கண்ணைச் சிமிட்டி] மெத்தச் சரி....

[வருதல் ராகோஜி. அழகிரி மெல்ல வெளியே நழுவுகிறான். ராகோஜி அவன் கையைப் பிடித்துக் கொண்டு மறைவாக ஜாடைகளுடன் இரகசியம் பேசுகிறான்,]

ராகோஜி : ராம், ராம், சலாம் !

அழகிரி : எத்தனை வீரர் ?

ராகோஜி : 5000 : [விரலைக் காட்டுகிறான்]

அழகிரி : ஊம், நடக்கட்டும் !

ராகோஜி : அச்சாஹை ராம், ராம் !

அழகிரி : நானும் இருக்கட்டுமா ?

ராகோஜி : அச்சாஹை ! ராம் ! ராம் !

அழகிரி : முதலில் மராட்டிய வீரரை மெல்ல இங்கே கூட்டுவோம்.

ராகோஜி : அச்சாஹை! ராம்! ராம்!

[ராகோஜி கண் சிமிட்டுகிறன். தளவாய்ச் சிங்கம் வாளை உருவிப் பாய்ந்து, அழகிரியின் கழுத்தைப் பிடிக்கிறன்.]

அழகிரி : ஆ! செத்தேன்! ராகோஜி ராகோஜி!

ராகோஜி : பொஹுூத், அச்சாஹை! ராம்! ராம்!

[ராம் ராம் என்று சொல்லிக்கொண்டே பூசைபோடுகிறன்]

அழகிரி : ஆ! மராட்டிய வீரர் எங்கே? என் வீரரெங்கே? ஆ! என் துணைவர் எங்கே?

ராகோஜி : அச்சாஹை! ராம் ராம் மஹ ராஜ்! தேகோ, இங்கே பாரும்.

[மகாராணிக்கு ஜாடை காட்டுகிறன். இராணி உருவிய வாளுடன் வருகிறள்.]

மங்கம்மாள் : இதோ என் பாதசேவை! தண்டசேவை வேண்டுமா? அல்லது இந்த வாளால் உனக்குப் பதில் சொல்ல வேண்டுமா?

அழகிரி : ஆ! தோற்றேன் தோற்றேன். என்னை மன்னிக்க வேண்டும். உயிர்ப்பிச்சை!

ராகோஜி : [வீரத்தேவனுகிறன்] விஷப் பாம்பிற்கும், தொடை மீதேறும் தேளுக்குமா

உயிர்ப்பிச்சை! உன்னை நான் பேடிபோல வெட்டமாட்டேன். இந்தா, உனக்கொரு வாள், எனக்கொரு வாள். போர் புரிவோம்.

[அழகிரி வாளை வாங்கிக்கொள்ளல்.]

அழகிரி : ஆ! மகாராணி, என் வினை என்னைச் சுட்டது. உயிர்ப்பிச்சை!

**மங்கம்மாள் :** வஞ்சகப் பாம்பே, உன்னை இனி என் வீட்டில் உயிரோடா வைத்திருப்பது? என் அரசில் இப்படிப்பட்ட சதிகாரன், வஞ்சகன், நன்றி மறந்த பதர் இருப்பதே எனக்கு வெட்கம். என்னை நீ இங்கு சிறை செய்யக் கருதினாய்; நீ இங்கு ஆயுள் மட்டும் சிறையிருக்கச் சம்மதமா? உன்னுயிர் எனது வாள் முனையில் உள்ளது! எனினும், நிராதரவான உன்னை நான் கொல்வது தருமமில்லை.

அழகிரி : தர்மத் தாயே, மதிமோசம் போனேன். என்னை மன்னிக்க வேண்டும். இனி, நான் இந்த அவமானத்தைச் சுமந்து வாழ மாட்டேன். இதோ, தற்கொலை புரிந்து கொள்கிறேன். என் நெஞ்சே என்னைச் சுடுகிறதே! ஆ, தீய மனமே உன்னைப் பிளக்கிறேன்! [தானே குத்திக் கொண்டு கீழே விழுகிறான்]

**மங்கம்மாள் :** ஆ! என்ன காரியம் செய்தாய்? உன்னுயிர் வாங்க நான் கருதவில்லையே!

**அழகிரி :** அம்மா...........அ....ம்....மா........ ! இவ்வாளுக்கு முன்பே மனச் சாட்சி என்னைக் கொன்று விட்டது........மன்னியுங்கள்.

**மங்கம்மாள் :** மன்னித்தேன் ! மன்னித் தேன் !

**அழகிரி :** இனி, நான் சமாதானமாக இறக்கிறேன் ! நாராயண ! நாராயண !

[இறக்கிருன்]

---

## பத்தாங் காட்சி

**விஜயரங்கன் :** அட, என்ன விநோதம்! நாமொன்று செய்ய வேறொன்று நடக்கிறது! எனது குருவும், தந்தை போல் நான் நேசித்தவனுமான மந்திரிக் கிழவனைத் தற்கொலை புரிந்து கொள்ளும்படி செய்த இவர்களைச் சும்மா விடுவேனா? இதோ பார் பங்காருவை விடுவிக்கிறேன்; இங்கு அடைபட்டுக் கிடக்கும் வீரரை வெளியேற்றுகிறேன். நானே அரண்மனைக் கதவைத் திறந்து விடுகிறேன். இந்த இராணியைச் சிறையிலடைத்து விடுகிறேன்! சூழ்ச்சி வீரர் என் பக்கம் இருக்கின்றனர்.

[போகிறான்

---

## பதினேராங் காட்சி

[மங்கம்மாள் அந்தரங்க அறை. மந்திரி திலகம், தளவாய் முதலியோர் ஆராய்கின்றனர்]

மங்கம்மாள் : மந்திரி, இந்த வாழ்வும் உலகும் எனக்குப் புளித்துப்போயின. இந்த மகுடம் எரிமலைபோல் தகிக்கிறது! இச்செங்கோல் எனக்கே நாகபாசமாக வருகிறது. இதோ, இதைக் கீழே வைத்து விடுகிறேன்.

மந்திரி திலகம் : மகாராணி, இன்னும் ஓராண்டாவது தாங்கள் இருக்கவேண்டும். பகைவர், எப்போ என்றுவிழித்திருக்கின்றனர். மராட்டியர் ஒரு புறம்; மைசூரில் ஏதோ கலகம் நடந்து ஹைதராலியின் அமுல் நடக்கிறதாம்! பாண்டி நாட்டை வெல்ல அவன் படை நடத்துகிருன். இதனிடையே, ஆர்க்காட்டில் சந்தா சாஹெபு நம்மைக் குறி வைத்திருக்கிருன். இத்தனை புலிகள் நம்மீது பாயவருகின்றன. தாங்கள் அரியணை வீற்றிருக்கவேண்டும். இன்றேல், நாடு கலகக்காடுதான்.

மங்கம்மாள் : இதெல்லாம் கருதித்தான் இந்தச் செங்கோலைப் பிடித்திருந்தேன்; அறங் காத்தேன். விஜயரங்கனுக்கு என்மீது கடும் பகையாயிருக்கிறது. ஊரெல்லாம் விரோதம்

கிளப்புகிருன். எந்த நிமிஷத்தில் என்ன நேருமோ அறியேன். இதோ மகுடம், இதோ செங்கோல். அவனிடம் தாருங்கள்! நான் இனி நிம்மதியாக முருகனை எண்ணி விரதங்கள் மேற்கொண்டு அமைதியாகச் செல்கிறேன்.

[வருதல் வீரத்தேவன்]

**வீரத்தேவன் :** ஆ, அம்மையே, இளவரசன் சிறையைத் திறந்துவிட்டான். பங்காரு தப்பி விட்டான். உட்போர் பற்றிக் கொண்டது. ஆ! ஆபத்து ; வாருங்கள் நம்முயிரைக் காப்போம்.

[எல்லாரும் ஓடுதல்]

**மங்கம்மாள் :** என் முடிவு எனக்குத் தெரியும். இவர்கள் சிறையிடு முன் நானே எனது பெயரால் கட்டிய அரண்மனையில் அடைபட்டுப் பட்டினியிருந்து இறைவன் மலரடி சேருகிறேன்.

[போகிருள். விஜயரங்கன் தலைமையில் புரட்சிப்படை வீராவேசமாக வருதல்]

**படைகள் :** ஹேய்........பிடி ராணியை........ எங்கே அவள் ஆசைமந்தி....ரி?

**விஜய :** ஹோ, இருவரும் ஓடிப்போனர்கள். பாட்டியைப் பிடித்துப் பூட்டுங்கள்! இதோ நானே ராஜா........!

[சிம்மாசனத்தில் உட்காருகிருன்.]

இதோ நானே முடி புனைந்துகொள்கிறேன்....என்னை யார் கேட்பது........?

புரட்சி வீரர்: விஜயரங்க சொக்கநாத நாயக்க மகாராஜ்கீ ஜே! ஜயவிஜயீபவ.......

[ஓடி வருதல் பங்காரு]

பங்காரு: மஹாராஜா....சலாம்............ ஜயம், ஜயம்........

விஜய: எங்கே, பாட்டி?

பங்காரு: வீட்டில்....

விஜய: சிறை?

பங்காரு: வீடே சிறை.......

விஜய: சபாஷ்! கொட்டுங்கள் நமது பெயர் சொல்லி ஜயபேரிகை....!

புரட்சி வீரர்: விஜயரங்க பூபதிகி ஜே, ஜே, ஜே!

---

## பன்னிரண்டாங் காட்சி

[இருட் சிறை. மங்கம்மாள் பட்டினியுடன் இருக்கிறாள்.]

உயிர்க்கிளியே, இந்தக் கூட்டில் உன் வேலையாயிற்று! இனிப் பறந்து செல்! வரும் போது எப்படி வந்தாயோ அப்படியே செல்! தெய்வமே! நான் வாழ்ந்த வாழ்வெல்லாம் கனவில் கண்ட ஆகாயக்கோட்டை போலிருக் கிறது. மனச்சாட்சியே! உன்னை நான் எப் போதும் மதித்தே நடந்தேன். சிவனே, மனதை உன்னடியில் வைத்தேன்; கையில் செங்கோல் பிடித்தேன். என் வாழ்வில் அறிந்து செய்த பிழைகள் எத்தனையோ ஆயிரம்; ராஜஸ தாமஸ வியாபாரங்களால் நான் இழைத்த குற்றங்கள் அனந்தம். எல்லாப் பிழையும் பொறுத்தருள்! இறைவனே, ஆ, நின் திருவடித் தாமரை காண்கின்றேன்! அதையே பற்றி இக்கூட்டை உதறி விடுதலை பெறுகிறேன்.

இதமென்று போக விஷத்தேனில்
ஈபோல் விழுந் தழிந்தேன்......
சதமென்று சூழும் சுகபோகங்
கண்டு சலித் தொழிந்தேன்.

கதிரொன்றி மின்னிடுங் கண்ணுடி-
வைர மெனமதித்துன்
பதமொன்றி நில்லாத பாவியே
னுக்கருள் பாலிப்பையோ ?

பொன்னைக் குவித்தென்ன ? போகம்
புசித்தென்ன ? மண்ணுலகந்
தன்னைப் புரந்தென்ன ? தாகந்
தணிந்துப சாந்த மாமோ ?

நின்னைத் துதித்து, நினதடி
யன்பு நிலைத்த வர்க்குத்
தன்னைக் கொடுத்துத் தனதாக்க
வல்ல தயாபரனே !

சிவனே, தஞ்சம், தஞ்சம்! நின்திருவடி நிழலில் என்னைச் சேர்த்துக்கொள் !

[இறக்கிறுள்]

[திரை விழுதல்]

முற்றிற்று

# அன்பு நிலைய நூல்கள்

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்
இயற்றியவை

| | ரூ. | அ. |
|---|---|---|
| புதுக்கவி விட்மன் | 1 | 8 |
| மகாகவி ராஸீன் | 1 | 4 |
| வரகவி தாகூர் | 1 | 8 |
| தாமரைக் குளம் முதலிய கதைகள் | 1 | 12 |
| அன்பின் அற்புதம் | 1 | 0 |
| வரகவி தாம்சன் | 0 | 8 |
| ஞானி எமர்ஸன் | 0 | 6 |
| மகாகவி தாந்தே (காவிய விமர்சனம்) | 1 | 8 |
| கல்விக் கதிர் (புதிய கல்வி முறை) காலிகோ | 1 | 12 |
| காலத்தேர் (காவிய நாடகம்) | 1 | 4 |
| ஸ்ரீ ராமதூதன் (கம்பன் கலை நாடகம்) | 1 | 4 |
| முல்லை மணம் (ஓரங்க இசை நாடகம்) | 0 | 4 |
| முன்னேற்றப் பாடல்கள் | 1 | 4 |
| கவிக் கனவுகள் | 0 | 12 |
| உடலுறுதி | 1 | 10 |
| அன்னை | 0 | 4 |
| அரவிந்த யோக தீபிகை | 0 | 8 |
| யோகசித்தி அல்லது பூரண வாழ்க்கை | 3 | 4 |
| அருட் சுடர் வள்ளலார் | 1 | 4 |
| நாடகக் கலை (ஆராய்ச்சி) | 0 | 6 |
| தியான மாலை | 1 | 0 |

**ANBU NILAYAM**

RAMACHANDRAPURAM (POST)
TRICHY Dist.
TIRUMAYAM (S. I. R.)

